# (58) நாடகமும் அரங்கியலும் (தமிழ்)

**வினாத்தாள் கட்டமைப்பு**

**வினாத்தாள் I - நாடகமும் அரங்கியலும் கொள்கைகளும் கோட்பாடுகளும்**

**நேரம் : 03 மணித்தியாலங்கள். (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)**

**பகுதி I** 05 தெரிவுகளைக் கொண்ட 40 பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். **ஒரு** வினாவுக்கு ஒரு புள்ளி வீதம் 40 புள்ளிகள்.

**பகுதி II** இப்பகுதியில் **A, B எனும் இரு பிரிவுகள் உண்டு.** பிரிவு A **மூன்று** கட்டமைப்பு வகை வினாக்களைக் கொண்டது. அவற்றுள் குறைந்தது **இரண்டு** வினாக்களைத் தெரிவு செய்து விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு 15 புள்ளிகள் வீதம் வழங்கப்படும்.
பிரிவு B **மூன்று** கட்டுரை வகை வினாக்களைக் கொண்டது.
அவற்றுள் **இரண்டு** வினாக்களைத் தெரிவு செய்து விடையளித்தல் வேண்டும்.
ஒரு வினாவுக்கு 15 புள்ளிகள் வீதம் வழங்கப்படும்.
மொத்தமாக **நான்கு** வினாக்களுக்கு விடை அளித்தல் வேண்டும்.
வினாத்தாள் I இன் மொத்தப் புள்ளிகள் :
பகுதி I : 1 X 40 = 40 புள்ளிகள்
பகுதி II : 4 X 15 = 60 புள்ளிகள்
மொத்தம்: 40 + 60 = 100 புள்ளிகள்.

**வினாத்தாள் II-நாடகமும் அரங்கியலும் பண்பாட்டுப் பின்புலம்.**

**நேரம் : 03 மணித்தியாலங்கள். (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)**

**பகுதி I** 05 தெரிவுகளைக் கொண்ட **40** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு **ஒரு** புள்ளி வீதம் 40 புள்ளிகள்.

**பகுதி II** இப்பகுதியில் **A, B எனும் இரு பிரிவுகள் உண்டு.** பிரிவு A **மூன்று** கட்டமைப்பு வகை வினாக்களைக் கொண்டது. அவற்றுள் குறைந்தது **இரண்டு** வினாக்களைத் தெரிவு செய்து விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவுக்கு 15 புள்ளிகள் வீதம் வழங்கப்படும். பிரிவு B **மூன்று** கட்டுரை வகை வினாக்களைக் கொண்டது. அவற்றுள் **இரண்டு** வினாக்களைத் தெரிவு செய்து விடையளித்தல் வேண்டும்.

மொத்தமாக **நான்கு** வினாக்களுக்கு விடை அளித்தல் வேண்டும்.
வினாத்தாள் II இன் மொத்தப் புள்ளிகள் :
பகுதி I : 1 X 40 = 40 புள்ளிகள்
பகுதி II : 4 X 15 = 60 புள்ளிகள்
மொத்தம்: 40 + 60 = 100 புள்ளிகள்.
ஒரு வினாவுக்கு **15** புள்ளிகள் வீதம் வழங்கப்படும்.

**செய்முறைப் பரீட்சை**

A நடிப்பு - 40 புள்ளிகள்
B அரங்க நிர்மாணம் - 30 புள்ளிகள்
தயாரிப்பு, நெறியாள்கை - 30 புள்ளிகள்
மொத்தம்: 40 + 30 + 30 = 100 புள்ளிகள்.

| | | |
|---|---|---|
| இறுதிப் புள்ளியைக் கணித்தல் : | வினாத்தாள் I | = 100 |
| | வினாத்தாள் II | = 100 |
| | வினாத்தால் III | = 100 |
| | இறுதிப் புள்ளி | = 300 ÷ 3 = 100 |

# (58) நாடகமும் அரங்கியலும் (தமிழ்)
## வினாத்தாள் I

**அறிவுறுத்தல்**

* இப் பகுதியில் **I** தொடக்கம் **40** வரையான வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் சரியானதும், மிகப் பொருத்தமானதுமான விடையைத் தெரிந்தெடுத்து, **புள்ளடித்தாளில்** அடையாளம் இடுக.

---

பகுதி - I

**1.** அகன்ற திரையில் இருட்சூழலுக்குள் பார்ப்போரை இருத்தி, காட்சிக் கூறுகளின் அசையும் விம்பங்களினால் கதைசொல்லுகின்ற கலை வடிவம்
(1) நாடகம் (2) சினிமா (3) வானொலி நாடகம்
(4) தொலைக் காட்சி நாடகம் (5) நடனம்

**2.** நிலையான உணர்வும், உறைநிலைத் தன்மையும் வெளிப்படுத்தும் கலை வடிவங்கள்
(1) நடனம், நாடகம், சினிமா (2) கட்டடம், சிற்பம், ஓவியம்
(3) இசை, நடனம், நாடகம் (4) இலக்கியம், கவிதை, சிறுகதை
(5) சிற்பம், ஓவியம், இசை

**3.** ஜேர்மனிய அறிஞரான ஸ்லீகல் (Sehlegal) என்பவர் உறைந்து போன இசைக்கலை என விவரிக்கும் கலை வடிவம்
(1) ஓவியம் (2) சிற்பம் (3) கட்டடம் (4) நாடகம் (5) நடனம்

**4.** "அரங்கில் பார்ப்போர் மேடையில் நடைபெறுவதற்கு ஏற்ப துலங்க வேண்டும்" எனக் கூறிய அரங்கவியலாளர்
(1) பரதர் (2) அரிஸ்ரோட்டில் (3) பெற்றோல்பிறக்ட்
(4) ஸ்ரனில்லவஸ்கி (5) ஓகஸ்தாபோல்

**5.** நாடகாசிரியரால் எழுதப்பெற்ற நாடக எழுத்துருவை உயிரோட்டமான ஒரு கலையாக மேடையில் படைக்கும் செயற்பாட்டில் முக்கியமானவர்
(1) நாடகத் தயாரிப்பாளர் (2) நாடக நெறியாளர்
(3) மேடை முகாமையாளர் (4) நாடகத் துணைக் கலைஞர்
(5) நாடக நடிகர்

**6.** அரங்க ஆற்றுகையில் 'மேடைமுகாமைத்துவம்' முனைப்புறுத்தப்பட்ட காலப்பகுதி
(1) 15ஆம் நூற்றாண்டு (2) 16ஆம் நூற்றாண்டு
(3) 17ஆம் நூற்றாண்டு (4) 18ஆம் நூற்றாண்டு
(5) 19ஆம் நூற்றாண்டு

**7.** ஈழத்து சமகால அரங்க வரலாற்றின் நெறியாள்கைப் போக்கில் பெரும்பாலும் உள்ளடங்காதது
(1) கலந்துரையாடல் நெறியாள்கை
(2) வசதி செய்பவராகவும் வழிப்படுத்துபவராகவும் தொழிற்படும் நெறியாள்கை
(3) படிமங்களுடன் பார்ப்போரை ஊடாட விட்டு ஆற்றுகையை வளர்த்துக் கொள்ளும் நெறியாள்கை
(4) கலந்துரையாடலையும், நியம ஒழுங்கு முறையையும் பின்பற்றி முன்னெடுக்கும் நெறியாள்கை
(5) நியம ஒழுங்கு முறையை மட்டும் பின்பற்றி முன்னெடுக்கும் நெறியாள்கை

**8.** 1960 களில் சாதி, தீண்டாமை போன்ற சமூகப் பிரச்சினைகளை பதிவு செய்த நாடகங்கள்
(1) கோபுரவாசல், கந்தன்கருணை, குடிநிலம்
(2) கோடை, புதியதொரு வீடு, சக்தி பிறக்குது
(3) மங்கையராய்ப் பிறப்பதற்கே, சங்காரம், விழிப்பு
(4) தாயுமாய் நாயுமானார், புதியதொரு வீடு, சக்தி பிறக்குது
(5) கூர், மானிடம் என்பது புல்லோ, மாதொருபாகம்

**9.** இந்தியாவில் கேரளப் பிரதேசத்தில் ஆடப்படும் கதகளி ஆற்றுகையில் மேலோங்கி நிற்கும் சித்திரிப்பு முறைமை
(1) உடல்வழி, குரல்வழி (2) காண்பியவழி, உடல்வழி
(3) குரல்வழி, காண்பியவழி (4) உணர்ச்சிவழி, காண்பியவழி
(5) குரல்வழி, உணர்ச்சிவழி

**10.** சமஸ்கிருத அரங்கக் கட்டமைப்பில் தென்கிழக்குமூலை, தென்மேற்குமூலை, வடமேற்குமூலை, வடகிழக்குமூலை என்பவற்றில் அமர்ந்திருப்பவர்கள் முறையே
(1) வைசியர், சூத்திரர், பிராமணர், சத்திரியர்
(2) பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர்
(3) வைசியர், சூத்திரர், பிராமணர், சத்திரியர்
(4) சூத்திரர், பிராமணர், சத்திரியர், வைசியர்
(5) பிராமணர், சத்திரியர், சூத்திரர், வைசியர்

**11.** வடமொழி அரங்கில் சுதாபன / ஆமுக பதங்கள் புலப்படுத்தும் உரையாடல்
(1) சூத்திரதாரிக்கும் துணை நடிகருக்கும் இடையில் இடம்பெறும்
(2) கதாநாயகனுக்கும் கதாநாயகிக்கும் இடையில் இடம்பெறும்
(3) சூத்திரதாரிக்கும் கதாநாயகனுக்கும் இடையில் இடம்பெறும்
(4) கதாநாயகனுக்கும் துணை நடிகனுக்கும் இடையில் இடம்பெறும்
(5) இரு துணை நடிகருக்கு இடையில் இடம்பெறும்

**12.** சோபோக்கிளிசின் 'ஈடிபஸ்மன்னன்' என்ற நாடகத்திற்கான கதை எங்கிருந்து பெறப்பட்டது
(1) தீவியபுராணம் (2) தொன்மங்கள் (3) இலியட்
(4) கவிதையியல் (5) ஒடிசி

**13.** கிரேக்க மகிழ்நெறி நாடகக் கட்டமைப்பில் உள்ளடங்காதது
(1) பாயிரம் (2) முரண் (3) வெளியேறுகை
(4) இசைப்பா முகாரி (5) பெருங்காட்சி

**14.** அரங்க வெளி ஒன்றில் நடன வடிவாக்கம் ஒன்றை முன்னெடுக்கும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய ஒழுங்கு முறை
(1) விடயம், வடிவம், திசை, வேகம், தாளம்
(2) விடயம், வேடஉடை, ஒளி, ஒலி, இசை
(3) வண்ணம், பயிற்சி, ஆர்வம், வடிவம், வேகம்
(4) பயிற்சி, படிமம், திசை, விருப்பம், ஒழுங்கு
(5) விடயம், இசை, வண்ணம், ஒளி, பயிற்சி

**15.** சீன நாடக மரபில் பீஜிங் ஒபேறா உருவாக்கம் பெற்ற காலப்பகுதி
(1) மில்குவான் (2) குப்பிளகான் (3) மொங்கோலியன்
(4) நவீன காலம் (5) சென்சுவான் காலம்

**16.** நொஹ் (Noh) நாடகத்தின் தொடக்கம் மற்றும் கோட்பாடு பற்றிய விடயங்களை வெளிப்படுத்தும் நூல்
(1) கொக்கென் (2) புகிகதென் (3) படாடோபம்
(4) கொஹுடா (5) யூஜென்

**17.** ஜப்பானிய நாடகங்களின் 'கற்பனைப் பயணம்' என்ற செயற்பாட்டைக் குறிக்கும் சொல் யாது?
(1) ஒகினா (2) அரக்கொடா (3) மிக்சியுக்சி
(4) யூகென் (5) ஒன்னகதா

**18.** விவாகம், நோய் தீர்த்தல், சுகப்பிரசவம் வேண்டி நிகழ்த்தப்படும் சடங்குகள்
(1) தைநீராடல், குளிர்த்தி, ரட்டயக்கும
(2) ரட்டயக்கும, மானம்பூ, சன்னியக்கும
(3) குளிர்த்தி, வாடாவள்ளி, தைநீராடல்
(4) களவேள்வி, ரட்டயக்கும, குளிர்த்தி
(5) ரட்டயக்கும, மானம்பூ, குளிர்த்தி

**19.** தமிழகத்தில் துணங்கைக் கூத்து ஆற்றுகை நிகழ்வு இடம்பெற்ற அரங்க வடிவம்
(1) களவேள்வி (2) வெறியாடல் (3) தைநீராடல்
(4) வாடாவள்ளி (5) ஆச்சியர்குரவை

**20.** தனது சமகால அரங்க உருவாக்கத்திற்காக ராம்லீலா சடங்கு ஆற்றுகையில் இருந்து அரங்கிற்கான மூலவளங்களைப்பெற்றுக் கொண்டவர்
(1) பீற்றர் புறூக் (2) றிச்சட் செக்னர்
(3) அன்ரனி ஆர்த்தோ (4) குறட்டவஸ்கி
(5) மேயர்கோல்ட்

**21.** "உண்மையான மகிழ்நெறி என்பது ஒரு தேசிய இனத்தின் மடமைகளையும், குறைபாடுகளையும் பேசுகின்ற சித்திரம்" எனக் கூறியவர்
(1) வோல்ட்டயர் (2) அரிஸ்ரோட்டில் (3) மொலியே
(4) ஆதர்மில்லர் (5) சேக்ஸ்பியர்

**22.** பிரான்ஸ் நாட்டு அரங்கவியலாளர்கள்
(1) எமிலிசோலா, மேயர்கோல்ட், ஸ்ரனிஸ்லவஸ்கி
(2) அன்ரோனியாஆர்த்தே, எமிலிசோலா, அன்ரோஅன்ரொயின்
(3) குறட்டவஸ்கி, அன்ரோனியாஆர்த்தே, றிச்சட்செக்னர்
(4) சாமுவேல்பெக்கட், அயனஸ்கோ, ஹென்றிக்இப்சன்
(5) பியரேகோனெல், ஒகஸ்தாபோல், ஸ்ரனிஸ்லவஸ்கி

**23.** ஐரோப்பிய அரங்க வரலாற்றில் மத்திய கால நாடகங்கள் நிகழ்த்தப்பட்ட ஒழுங்கு
(1) பீடம், தேவாலய வாயில், ஊர்தி, 'பூத்' அரங்கு
(2) 'பூத்' அரங்கு, தேவாலய வாயில், பீடம், ஊர்தி
(3) ஊர்தி, திருச்சபை, பட்டணச் சதுக்க அரங்கு, பீடம்
(4) பீடம், ஊர்தி, தெருவெளி, தேவாலய வாயில்
(5) திருச்சபை, பீடம், ஊர்தி, தெருவெளி

**24.** பின்வருவனவற்றில் வாசாப்பு பற்றிய சரியான கூற்று
(1) பெண்கள் களரியில் அனுமதிக்கப்படுவர்
(2) புலசந்தோர் அரசனின் வருகையை எடுத்துரைப்பர்
(3) கட்டியகாரன் நாடகத்தை அறிமுகம் செய்வார்
(4) கதையில் புனிதர்கள் பிரதானமாக இடம் பெறுவர்
(5) ஆண்கள் மாத்திரம் நடிப்பர்

**25.** பால்நிலைச் சமத்துவத்துடன் தொடர்புடையவையாகக் கருதப்படும் ஈழத்து தமிழ் நாடகங்கள்
(1) சக்தி பிறக்குது, கூர், அடுப்படி அரட்டை
(2) சரிபாதி, கடுழியம், காலம் சிவக்கிறது
(3) மங்கையராய் பிறப்பதற்கே, கூர், மானிடம் என்பது புல்லோ
(4) தாயுமாய் நாயுமானார், மழை, சரிபாதி
(5) கோடை, புதியதொரு வீடு, சக்தி பிறக்குது

**26.** இப்சனது நாடகங்களில் காணப்படும் பண்பு அல்லாதது
(1) பாத்திரங்களின் நிஜ வாழ்வை ஒத்ததாக அமைவது
(2) குறியீட்டுவாத அணுகுமுறையைப் பின்பற்றுவது
(3) காரண காரியத் தொடர்பைப் பின்பற்றுவது
(4) நன்கமைந்த நாடகப் பண்பைப் பின்பற்றுவது
(5) அவலச்சுவைப் பண்பை கையாளுவது

**27.** அபிஞ்ஞான சாகுந்தலம் நாடகத்தில் துஷியந்தன் துருவாசரின் சாபத்தால் சகுந்தலையை ஏற்றுக் கொள்ளாது நினைவின்றி இருக்கும் நாடக நெருக்கடிக் கட்டத்தைக் குறிக்கும் சந்தி
(1) முகசந்தி (2) பிரதிமுகசந்தி (3) கா்ப்பசந்தி
(4) விமா்சகசந்தி (5) நிா்வஹனசந்தி

**28.** "சமயச் சடங்கின் அடியாக நாடகம் தோற்றம் பெற்றது" என்பதனை வலியுறுத்தும் கருத்துக்களில் கா.சிவத்தம்பியின் கருத்தாகக் கொள்ளத்தக்கது
(1) இலங்கை நாட்டார் நாடகங்களும் சமயச் சடங்கின் அடியாகத் தோன்றியவை.
(2) வடக்கு கிழக்கு நாட்டுக் கூத்துக்கள் சமயத் தொடர்புடையன.
(3) ஒரு காலம் சடங்காக இருந்த ஒன்று, சமயச் சார்பற்ற நிலையை எய்துகின்ற பொழுது நாடகமாகும்.
(4) இந்திய நாடகம் சமயத் தொடர்புடையது. இதற்கான மூலவேர்களை இருக்கு வேதத்தில் காணலாம்.
(5) வீர வழிபாடுகளே திறஜெடியின் தோற்றத்திற்கு காரணம்.

**29.** நாடகத் தயாரிப்புச் செயற்பாட்டில் நெறியாளரின் பணி அல்லாதது
(1) எழுத்துருவைப் பகுப்பாய்வு செய்தல் (2) நடிபாகமளித்தல்
(3) ஓத்திகைகளை மேற்கொள்ளல் (4) நடிகர்களை ஒழுங்குபடுத்தல்
(5) வியாக்கியானம் செய்தல்

**30.** பின்வரும் கூற்றுக்களில் கிரேக்க நாடகாசிரியரான சோபோக்கிளிசிற்குப் பொருந்தாதது
(1) ஈஸ்கலசைவிட சிக்கலான சூழ்வுகளைத் தெரிவு செய்தவர்
(2) தனது பிந்திய நாடகங்களில் நான்காவது நடிகரையும் சேர்த்துக் கொண்டவர்
(3) நாடகத்தில் தொங்கு திரைகளைப் பயன்படுத்தியவர்
(4) முரண்பாடுகளுக்கூடாக நாடகத்தை வளர்த்தவர்
(5) 13 வருடங்கள் தொடர்ந்தும் நாடகப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்

**31.** உரோம சாம்ராஜ்யத்தில் ஊமச்சித்திரிப்பை வெற்றிகரமாக வளர்த்தெடுத்தவர்
(1) அடோல்ப் அப்பியா (2) யக்குஸ் கோப்பா (3) மார்ஷல் மாஸ்யூ
(4) சார்ளி சப்ளின் (5) ஒகஸ்டஸ்

**32.** யப்பானிய நோ நாடகத்திற்கும் ஈழத்துத் தமிழ்ப் பாரம்பரிய கூத்துக்கும் இடையிலான ஒருமைப்பாடாகக் கொள்ளத்தக்கது
(1) ஆண்களால் மட்டும் நடிக்கப்படுவதுடன் பாத்திரம் தன்னைத்தானே அறிமுகம் செய்யும்
(2) பாத்திரம் சபையோரால் அறிமுகப்படுத்தப்படுவதுடன் பெண்களும் நடிப்பர்
(3) பாரம்பரிய மொழிச் செழுமையும் வேடமுகப் பயன்பாடும் காணப்படல்
(4) வட்டவடிவமான மேடையும் தீப்பந்த ஒளியும் காணப்படல்
(5) தெளிவான எளிமையான வேட உடையும் ஒப்பனையும் பயன்படுத்தப்படும்

**33.** ஆக்கபூர்வமான நாடக விமர்சனம் பற்றிய பின்வரும் கூற்றுக்களுள் பொருத்தமானவை
(அ) நாடகம் பற்றிய வலிமைகளைக் கூறாமல் நலிவுகளைக் கூறுதல்
(ஆ) நாடகத்தின் வலிமைகளைக் கூறி நலிவுகளுக்கு மாற்றுவழியையும் முன்வைத்தல்
(இ) நாடகம் பற்றிய ஒரு கருத்தை தன் சிந்தனைக்குள் வைத்துக் கொண்டு நிறுவ முற்படல்
(ஈ) நெறியாளரின் படைப்பாற்றலின் நுணுக்கங்களைக் கண்டறிந்து வெளிக்கொணர்தல்
(உ) குறித்த படைப்பை ஏனைய படைப்புக்களுடன் ஒப்பிட்டு அதன் வலிமையைக் கண்டறிதல்
(1) அ, இ. உ (2) அ, ஆ, இ (3) இ, ஈ, உ
(4) ஆ, ஈ, உ (5) ஆ, இ, ஈ

**34.** அதீத மனவெழுச்சித் தன்மைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் நாடக மோடி
(1) மனோரதியம் (2) இயற்பண்பு (3) அபத்தம்
(4) யதார்த்தம் (5) வெளிப்பாட்டுவாதம்

**35.** 'கலை நுணுக்கத்திறனை அடைவதற்குப் பல மாதங்களாக முயலாத எந்த நடிகரும் ஒரே நாளில் பெரும் புகழை எய்த முடியாது' எனக் கூறிய அரங்கவியலாளர்
(1) ஸ்ரனிஸ்லவஸ்கி (2) மேயர் கோல்ட் (3) றிச்சட் செக்னர்
(4) அன்ரனியோ ஆர்த்தோ (5) சாரா பெணான்டு

**36.** சாகுந்தலம் நாடகத்தில் இடம்பெறும் பின்வரும் உரையாடலை அவதானித்து விடையளிக்குக.
அரசன் : (தனக்குள் களிப்போடு) என் பேராவல் இப்போது நிறைவேறி இருக்கையில் அதனை நான் ஏன் களிப்புடன் வரவேற்றலாகாது? (குழந்தையைத் தழுவிக் கொள்கிறான்) இவ் உரையாடல் குறித்து நிற்கும் சொல்லாடல் நுட்பம்

(1) தனிமொழி (2) புறச்சொல் (3) தன்னுரை
(4) ஆகாயக்கிளத்தல் (5) தனிச்சொல்

**37.** படத்தில் அற்புதம், ரௌத்திரம் வெளிப்படுத்தும் எழுத்துக்கள்

(1) A, B
(2) F, I
(3) F, H
(4) D, E
(5) G, I



A B C D E F G H I

**38.** கிராமப்புறங்களில் ஆடப்பட்டு வந்த கூத்தை 'அழகியல்' நிலைப்பட்டதாக மாற்ற வேண்டும் என்ற முனைப்புடன் செயற்பட்டவர்


(1)

(2)

(3)

(4)

(5)

**39.** 'இல்லாத ஒன்றை இருப்பது போல நடித்துக் காட்டுவதே நாடகத்திற்கு முக்கியமானதொரு பெருமையும், அழகும் ஆகும்' எனும் கருத்தை முன்வைத்தவர்


(1)

(2)

(3)

(4)

(5)

**40.** கற்பிதம் / மனோரதியவாத நாடகமோடிக்குரியவர்


(1)

(2)

(3)

(4)

(5)

**( 1 × 40 = 40 புள்ளிகள்)**

**

## பகுதி – II

**அறிவுறுத்தல்**

* பிரிவு A இல் இருந்து **இரண்டு** வினாக்களுக்குக் குறையாமலும், பிரிவு B இல் இருந்து **இரண்டு** வினாக்களுக்குக் குறையாமலும் தெரிவு செய்து, மொத்தம் **நான்கு** வினாக்களுக்கு விடையளிக்குக.

### பிரிவு A

**1.** (i) கலை, கைவினை ஆகிய எண்ணக்கருக்கள் பற்றி நீர் கருதுவது யாது? (03 புள்ளிகள்)

(ii) மேலைத்தேய கலைக் கோட்பாடுகள் இரண்டையும், கீழைத்தேய கலை பற்றிய கோட்பாடுகள் இரண்டையும் முன்வைத்து விளக்குக? (05 புள்ளிகள்)

(iii) நீர் பங்கு பற்றிய ஆற்றுகை நிகழ்வு ஒன்றில் உமது ஆற்றுகை முறைமையையும், அதில் பார்ப்போரின் பதிற்குறிகளையும் பற்றிச் சுருக்கமாக விளக்குக? (07 புள்ளிகள்)

**2.** (i) இயற்பண்பு, யதார்த்த அரங்க மரபுகளின் தோற்றத்திற்குப் பின்புலமாய் அமைந்த மூன்று காரணிகளை முன்வைக்குக. (03 புள்ளிகள்)

(ii) அரங்கு பற்றி பேட்டோல்ட் பிரேச்ட் முன்வைத்த பிரதான கோட்பாட்டை எடுத்துக்கூறி விளக்குக. (05 புள்ளிகள்)

(iii) யதார்த்த, யதார்த்த விரோத அரங்குகளில் நடிப்பதற்காக நீர் பெற்றுக் கொண்ட பயிற்சி முறைகளை எடுத்துக்கூறி ஒப்பிடுக. (07 புள்ளிகள்)

**3.** சமஸ்கிருத அரங்கு, கிரேக்க அரங்கு ஆகிய இரண்டு அரங்க முறைமைகளினதும்

(i) அரங்கக் கட்டமைப்பு (05 புள்ளிகள்)
(ii) ஆற்றுகை வெளிகள் (05 புள்ளிகள்)
(iii) ஆற்றுகை முறைமைகள் (05 புள்ளிகள்)
என்பவற்றை ஒப்பிட்டு விளக்குக.

### பிரிவு B

**4.** ஈழத் தமிழ் அரங்கின் பல்வேறு பட்ட அரங்கப் போக்குகள் மூன்றினை இனங்கண்டு, அவற்றின் சமூகப் பின்புலம், ஆற்றுகை முறைமைகள் என்பவற்றை எடுத்துக்கூறி விளக்குக? (15 புள்ளிகள்)

**5.** நாடக விமர்சனத்தின்போது கவனத்திற்கொள்ளவேண்டிய அம்சங்களைக் குறிப்பிட்டு, நீர் பார்த்த நாடகம் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு நாடக விமர்சனம் ஒன்றை முன்வைக்குக. (15 புள்ளிகள்)

**6.** பின்வருவனவற்றுள் **மூன்று** அரங்குகளின் ஆற்றுகை முறைமை பற்றி சிறுகுறிப்பு எழுதுக.
(i) கபுக்கி
(ii) சொக்கரி
(iii) பீஜிங் ஒபேரா
(iv) கூத்து
(v) சடங்கு (3x5 = 15 புள்ளிகள்)

* * *

## (58) நாடகமும் அரங்கியலும் (தமிழ்)
### வினாத்தாள் II

**அறிவுறுத்தல்**

* இப் பகுதியில் **1** தொடக்கம் **40** வரையான வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் சரியானதும் மிகப் பொருத்தமானதுமான விடையைத் தெரிந்தெடுத்து, **புள்ளடித்தாளில்** அடையாளம் இடுக.

### பகுதி – I

**1.** இந்தியக் கலைகளில் மேலோங்கியிருக்கும் பண்புகள்
(1) அறிவும், கற்பனையும்
(2) ஆன்மஞானமும், இறைபக்தியும்
(3) இறைபக்தியும், ஒழுக்கமும்
(4) தத்துவமும், உண்மையும்
(5) கற்பனையும், ஆன்மஞானமும்

**2.** கிரேக்க அரங்க மரபில் உளவியல் சார் நாடகங்களைப் படைத்தவர்
(1) ஈஸ்கலஸ்
(2) சோபோகிளிஸ்
(3) யூரிபிடிஸ்
(4) அரிஸ்டோபன்ஸ்
(5) மெனாண்டர்

**3.** மலையகத்தில் மாசிமாதம் அமாவாசை கழிந்த வரும் மூன்றாம் நாள் பெரும்பாலும் நிகழ்த்தப்படுவது
(1) பொன்னர்சங்கர்கூத்து
(2) காமன்கூத்து
(3) வீரபத்திரர்ஆட்டம்
(4) அருச்சுனன்தபசு
(5) காடேறித்திருவிழா

**4.** கிரேக்க அரங்கில் "பரடோஸ்" குறிக்கும் பகுதி
(1) ஆடுகளத்தின் முன் பகுதி
(2) பார்ப்போர் அமரும் பகுதி
(3) பார்ப்போர் கூடத்தின் இரு அந்தங்களுக்கிடையிலான நிலப் பகுதி
(4) பலிபீடத்தினை அண்டிய பகுதி
(5) ஆடுகளத்தின் வெளிப்பகுதி

**5.** "சமஸ்கிருத" நாடகத்தின் சூத்திரதாரியை ஒத்தவராக சிங்கள "நாடகம" வில் வருபவர்
(1) பகுபூதையா
(2) பபூன்
(3) பொத்தே குரு
(4) கோணங்கி
(5) வெசமுனி

**6.** சமஸ்கிருத நாடகாசிரியரான ஸ்ரீ ஹர்சர் எழுதிய நாடகங்கள்
(1) அபிக்ஞான சாகுந்தலம், நாகானந்தம், ஊருபங்கம்
(2) இரத்னாவளி, பிரியதர்சிகா, நாகானந்தம்
(3) பாலசரிதம், மாளவிகாக்கினிமித்திரம், இரத்னாவளி
(4) ஸ்வப்னவாசவதத்த, மிருச்சகடிகம், விக்ரமோர்வசியம்
(5) தூதகடோத்கஜம், பஞ்சராத்தரம், தரித்ரசாருதத்தம்

**7.** பேராதனைப் பல்கலைக்கழகத்தினால் தயாரிக்கப்பட்ட பேராசிரியர் கணபதிப்பிள்ளையின் நாடகங்கள்
(1) உடையார்மிடுக்கு, தவறானஎண்ணம், துரோகிகள்
(2) கண்ணன்கூத்து, பொருளோபொருள், சங்கிலி
(3) முருகன்திருகுதாளம், சுந்தரம்எங்கே, உடையார்மிடுக்கு
(4) நாட்டவன் நகரவாழ்க்கை, துரோகிகள், பொருளோபொருள்
(5) சங்கிலி, துரோகிகள், தவறானஎண்ணம்

**8.** ஆற்றுகைக் கலைகளான இசை, நடனம், வில்லுப்பாட்டு ஆகியவற்றுடன் தொடர்புடைய கலைஞர்கள்
(1) வி.வி வைரமுத்து, பிரான்சிஸ் ஜெனம், அரசு
(2) பாலமுரளிகிருஷ்ணா, கண்ணன், நாகமணிப்போடி
(3) சின்னமணி, சி.மௌனகுரு, ருக்மணி அருண்டேல்
(4) தைரியநாதன், கலாமணி, செல்லையா
(5) பாலமுரளிகிருஷ்ணா, ருக்மணி அருண்டேல், சின்னமணி

**9.** இப்சனால் படைக்கப்பட்ட ‘ஒரு பாவையின் வீடு’ நாடகத்தில் மேடைக்கு வரும் பாத்திரங்களின் ஒழுங்கு முறை
(1) நோறா, ஹெல்மர், குறொக்ஸ்டட், ராங், திருமதி லிண்டே
(2) நோறா, ஹெல்மர், ராங், குறொக்ஸ்டட், திருமதி லிண்டே
(3) ஹெல்மர், ராங், குறொக்ஸ்டட், நோறா, திருமதி லிண்டே
(4) ராங், திருமதி லிண்டே, நோறா, ஹெல்மர், குறொக்ஸ்டட்
(5) குறொக்ஸ்டட், நோறா, ராங், திருமதி லிண்டே, ஹெல்மர்

**10.** கிங்லியர் நாடகத்தில் ‘குறும்புப் பையனிடம் அகப்பட்ட இலையான் போலக் கடவுள் தம் விளையாட்டிற்காக எம்மைப் படைத்தார்’ எனும் வாக்கியத்திற்குரிய பாத்திரம்
(1) லியர் (2) கென்றி பிரபு (3) பர்கண்டி பிரபு
(4) எட்மண்ட் (5) கிளஸ்டர் பிரபு

**11.** “கொட்டை உழுந்தைக் குளிர் நீரில் ஊறவைத்து………..” என்ற பாவகை உரையாடலைக் கொண்ட நாடகம்
(1) ஒரு பாவைவீடு (2) கோடை (3) ஈடிபஸ்
(4) எந்தையும் தாயும் (5) சாகுந்தலம்

**12.** வடமோடிக் கூத்தில் வீரர் பாத்திரங்களுக்குரிய தனித்துவமான ஆட்டங்கள்
(1) நாலடி, குத்துமிதி, பாய்ச்சல் (2) ஒய்யாரம், தட்டடி, சிறு வட்டம்
(3) எட்டடி, நாலடி, ஒய்யாரம் (4) ஒய்யாரம், எட்டுப் போடல், தட்டடி
(5) தட்டடி, எட்டடி, நாலடி

**13.** பாரம்பரியக் கூத்தின் கட்டியக்காரன் பணிகளாக அமையாதது
(1) சபையோரை ஆயத்தம் செய்தல் (2) பாத்திர அறிமுகம் செய்தல்
(3) நகைச்சுவையை உண்டாக்குதல் (4) எடுத்துச் சொல்லியாகச் செயற்படல்
(5) கதைச் சுருக்கத்தை எடுத்துக் கூறல்

**14.** தமிழக நாடகப் பண்பாட்டில் அடிநிலைச் சமூகத்தை முதன்மைப்படுத்தல், சாதிமுறையினை வலுவிழக்கச் செய்தல், இறைபக்தியினை வெளிப்படுத்தல் போன்ற அரங்கியல் பின்புலங்களைக் கொண்ட காலப்பகுதியாகக் கொள்ளத்தக்கது
(1) சங்ககாலம் (2) நவீன காலம்
(3) விஜயநகர நாயக்கர் காலம் (4) கோயில் பண்பாட்டுக் காலம்
(5) வணிகயுக காலம்

**15.** சோழர் காலத்தில் நடனமாடிய ஆண்களுக்கு வழங்கப்பட்ட பட்டங்களில் ஒன்று
(1) கூத்தர் (2) பாணர் (3) நிருத்தப்பேரரையன்
(4) ஆடல் கலைஞர் (5) கோடியர்

**16.** ஆய்ச்சியர் குரவை சடங்காட்ட நிகழ்த்துகையில் வரும் பாத்திரங்கள்
(1) விறலி, பாணர், மாதரி (2) கண்ணகி, ஐயை, பாடினி
(3) மாதவி, மாதிரி, ஐயை (4) குரவைப் பெண்கள், ஐயை, மாதரி
(5) விறலி, ஐயை, கண்ணகி

**17.** பின்வருவனவற்றுள் ‘குருநான்சே’யினால் நிகழ்த்தப்படும் சிங்களச் சடங்கு
(1) தொவில் (2) ஹும்மடுவ (3) ரட்டயக்கும
(4) சன்னியக்கும (5) கொஹெம்பஹங்காரிய

**18.** சிங்கள அரங்க வரலாற்றில் ‘விவித வீதி நாட்டிய கண்டாயம’ என்ற பெயரில் நாடகங்களைத் தயாரித்தவர்
(1) தம்ம ஜாகொட (2) குணசேன கலபதி
(3) தயானந்த குணவர்த்தன (4) காமினி ஹத்தொட்டுவேகம
(5) சோமலதா சுபசிங்க

**19.** சிங்கள அரங்கப் பண்பாட்டில் சிங்கள, தமிழ் கலைஞர்களை இணைத்துச் செயற்பட்டோர்
(1) சந்திரசேன தஸநாயக்க, சோமலதா சுபசிங்க, பராக்கிரம நிரியெல்ல
(2) தயானந்த குணவர்த்தன, தம்ம ஜாகொட, ஹாமினி ஹத்தொட்டு வேகம
(3) தர்மஸ்ரீ பண்டார நாயக்க, ஆர்.ஆர். சமரக்கோன், பராக்கிரம நிரியெல்ல
(4) ஹென்றி ஜெயசேன, பராக்கிரம நிரியெல்ல, தர்மஸ்ரீ பண்டார நாயக்க
(5) சோமலதா சுபசிங்க, தம்ம ஜாகொட, தயானந்த குணவர்த்தன

**20.** இலங்கை நாடக வளர்ச்சியில் பல்கலைக் கழகங்களின் பங்களிப்பும் முக்கியத்துவம் பெறுகின்றது. இந்த வகையில் மதமாற்றம், பயணம், நிழல்கள், நவக்கிரகம் போன்ற நாடகங்களை மேடையேற்றிய பல்கலைக்கழகம்
(1) கொழும்புப் பல்கலைக்கழகம் (2) பேராதனைப் பல்கலைக்கழகம்
(3) யாழ் பல்கலைக்கழகம் (4) கிழக்குப் பல்கலைக்கழகம்
(5) கட்டுப்பெத்த வளாகம்

**21.** அபிஞ்ஞான சாகுந்தலம் நாடகத்தில் வரும் பெண் பாத்திரங்களைக் கொண்ட தொகுதியாகக் காணப்படுவது
(1) சகுந்தலை, அதிதி, பிரதீகாரி, நடி
(2) சகுந்தலை, கஞ்சுகி, மாதலி, அனசூயை
(3) பிரியம்வதை, அனசூயை, கஞ்சுகி, சகுந்தலை
(4) கௌதமி, சானுமதி, மாதலி, சகுந்தலை
(5) நடி, அதிதி, சகுந்தலை, மாதலி

**22.** எலிசபெத் கால அரங்க அளிக்கைகளில் "வெற்றுக் கவிதை" என்ற நுட்பத்தைப் பின்பற்றியவர்கள்
(1) ஷேக்ஸ்பியர் - பென் ஜோன்சன்
(2) தோமஸ் கிட் - றொபேட் கிறீம்
(3) ஷேக்ஸ்பியர் - கிறிஸ்டோபர் மாலோ
(4) பென் ஜோன்சன் - கிறிஸ்டோபர் மாலோ
(5) றொபேட் கிறீம் - பென் ஜோன்சன்

**23.** பின்வருவோருள் "தூய உள்ளுணர்வின் வெளிப்பாடே கலை" எனக் கூறியவர்
(1) ஹெகல் (2) பியேட்ஸ்லி (3) டால்ஸ்டாய்
(4) ஹொலிவூட் (5) குரோசே

**24.** ஐரோப்பிய அரங்கில் சூழலியல் அரங்கை முதன்மைப்படுத்திய அரங்கவியலாளர்
(1) பீற்றர்புறூக் (2) குறொட்டவ்ஸ்கி (3) றிச்சட்செக்னர்
(4) அன்ரனியோஆர்த்தே (5) ஒகஸ்தாபோல்

**25.** கிரேக்க நாடகங்களான த சோபேறி (The Choephori), புளுட்டஸ் (Plutus), ஹெலன் (Helan) போன்ற நாடகங்களின் ஆசிரியர்கள் முறையே
(1) ஈஸ்கலஸ், அரிஸ்ரோபன்ஸ், சோபோகிளிஸ்
(2) ஈஸ்கலஸ், அரிஸ்ரோபன்ஸ், யூரிபிடிஸ்
(3) யூரிபிடிஸ், சோபோகிளிஸ், மெனாண்டர்
(4) யூரிபிடிஸ், அரிஸ்ரோபன்ஸ், மெனாண்டர்
(5) அரிஸ்ரோபன்ஸ், மெனாண்டர், சோபோகிளிஸ்

**26.** ஐரோப்பிய அரங்கில் மிகைப்பாட்டுவாத அரங்க மரபை ஒட்டி நாடகங்களை எழுதியவர்
(1) எமிலிசோலா (2) அலக்சாண்டர்டூமாஸ் (3) இப்சன்
(4) அன்ரன் செக்கோவ் (5) ரசீன்

**27.** "எந்தையும் தாயும்" நாடகத்தில் கிட்டத்தட்ட 'ஒரே மாதிரியான பிரச்சினைகளை எதிர் கொள்பவர்' என இனங்காணப்பட்ட பாத்திரங்கள்
(1) செல்வரட்ணம், ஐயாத்துரை (2) கண்ணன், வசந்தி
(3) மகேஸ்வரி, ஐயாத்துரை (4) சங்கரப்பிள்ளை, செல்வரட்ணம்
(5) சங்கரப்பிள்ளை, வசந்தி

**28.** கதை கூறும் பாங்கில் பள்ளு, நொண்டி, குறவஞ்சி போன்ற ஆற்றுகைகள் நிகழ்ந்த காலப் பகுதி
(1) சங்கமருவிய காலம்
(2) பல்லவர் காலம்
(3) சோழர் காலம்
(4) விஜயநகர நாயக்கர் காலம்
(5) நவீன காலம்

**29.** ஈழத்து நவீன நாடக வரலாற்றில் பெரும்பாலும் நாடகங்களை எழுதியோர் வேறாகவும், அவற்றை நெறியாள்கை செய்தோர் வேறாகவும் காணப்படுகின்றனர். ஈழத்தில் உயிர்த்த மனிதர் கூத்து, மண்சுமந்த மேனியர் ஆகிய நாடகங்களை முறையே எழுதியவர்களையும் நெறியாள்கை செய்தவரையும் கொண்ட தொகுதி
(1) இ.முருகையன், ம.சண்முகலிங்கம், க.சிதம்பரநாதன்
(2) ம.சண்முகலிங்கம், மகாகவி உருத்திரமூர்த்தி, க. பாலேந்திரா
(3) மு.நித்தியானந்தன், அம்பி, அ.தாசீசியஸ்
(4) மகாகவி உருத்திரமூர்த்தி, ம.சண்முகலிங்கம், க. சிதம்பரநாதன்
(5) இ.முருகையன், அம்பி, சி. மௌனகுரு

**30.** ''தேவலோகம் விட்டுமல்லோ தேவேந்திரன் வருகிறாரே ....'' என்ற பாடல் அடிகள் இடம்பெறும் கூத்து
(1) சிந்து நடைக் கூத்து
(2) கோவலன் கூத்து
(3) காமன் கூத்து
(4) தருமபுத்திரன் நாடகம் (வடமோடிக் கூத்து)
(5) அனுருத்திர நாடகம் (தென்மோடிக் கூத்து)

**31.** பேராசிரியர் சி. மௌனகுரு தயாரித்த இராவணேசன் நாடகத்தில் வரும் ''வந்தாயோ பாரினில் உன்வலி மடக்கியே சூலம் எடுக்கிறேனடா'' எனும் பாடலைப்பாடும் பாத்திரம்
(1) இராவணன்
(2) இராமன்
(3) இந்திரஜித்
(4) இலக்குமணன்
(5) கும்பகர்ணன்

**32.** கற்பனைப் பாத்திரங்கள் செயற்கையான தமிழில் பேசி உலாவிய மேடையில், நிஜப் பாத்திரங்களான சீனிக்குட்டி, உடையார் குடியானவன், கிராமத்துக் கிழவி, பிறக்கிறாசி போன்ற பாத்திரங்களை மேடையில் கொண்டு வந்தவர்
(1) சண்முகலிங்கம்
(2) வித்தியானந்தன்
(3)சொர்ணலிங்கம்
(4) கணபதிப்பிள்ளை
(5) பாலேந்திரா

**33.** சமஸ்கிருத நாடகாசிரியரான பாசர் எழுதிய ஐந்து அங்கங்களைக் கொண்ட நாடகம்
(1) ஊருபங்கம்
(2) கர்ணபார
(3) பாலசரித்த
(4) தூதவாக்கிய
(5) அவிமாரக்க

**34.** கோடை நாடகம் பற்றிய பின்வரும் கூற்றுக்களில் பிழையான கூற்றுக்கள்
அ. இது மஹாகவி உருத்திர மூர்த்தியால் 1965 இல் எழுதப்பட்டது.
ஆ. அ. தாசீசியஸ் என்பவரால் 1969 இல் நெறியாள்கை செய்யப்பட்டது.
இ. தேசிய பாரம்பரியத்தை அழித்தொழித்தமை பற்றிப் பேசுவது.
ஈ. மாணிக்கம், செல்லம், கமலி, சோமு, கனகப்பு, பஞ்சையர், விதானை போன்ற பாத்திரங்களைக் கொண்டது.
உ. இது கொழும்பு, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களில் மேடையேற்றப்பட்டது.
(1) ஆ, இ (2) ஈ, உ (3) அ, ஆ (4) இ, ஈ (5) அ, உ

**35.** குழந்தை ம. சண்முகலிங்கத்தின் நாடகங்களில் தனித்திருக்கும் பெற்றோர்களின் ஏக்கங்கள், பால்நிலைச் சமத்துவம் ஆகியவற்றினை விடயப்பொருளாகக் கொண்டு அமைந்த நாடகங்கள்
(1) எங்கள் தவப்பயன், அன்னை இட்ட தீ
(2) உறவுகள், வையத்துள் தெய்வம்
(3) எந்தையும் தாயும், தாயுமாய் நாயுமானார்
(4) வாற்பேத்தை, நெடும்பயணம்
(5) சத்திய சோதனை, உறவுகள்

**36.** தமிழகத்தில் நிகழ்த்தப்படும் கலை வடிவம்



(1)



(2)



(3)



(4)



(5)

**37.** படத்திலுள்ள வேடமுகங்கள்



(1) ஒபேறா
(2) நோ
(3) புன்றக்கு
(4) கபுக்கி
(5) பலே

**38.** பேராசிரியர் எதிரிவீர சரச்சந்திராவின் தயாரிப்புக்கள் குறித்து நிற்கும் படங்கள் எவை?



A



B



C



D

(1) A, B　　(2) B, C　　(3) C, D　　(4) B, D　　(5) A, C

**39.** "இராவணேசன்" நாடகத்தின் பாத்திரங்களின் வரவுகளை ஒழுங்கமைக்கும் படங்கள் அடங்கிய எழுத்துக் கூட்டம் எது?



A　B　C　D　E　F

(1) A, B, C, D, E, F
(2) E, F, A , B, C,D
(3) B, C, D, E, F, A
(4) C, F, B, E, A,D
(5) C, F, B, E, D, A

**40.** படத்திலுள்ள பாத்திரங்கள் இடம் பெற்ற நாடகம் எது?
(1) ஈடிபஸ் மன்னன்
(2) ஒரு பாவையின் வீடு
(3) கிங்லியர்
(4) அன்ரிக்கனி
(5) ஒதல்லோ

**( 1 × 40 = 40 புள்ளிகள்)**

* *

## பகுதி – II

**அறிவுறுத்தல்**

* பிரிவு **A** இல் இருந்து **இரண்டு** வினாக்களுக்குக் குறையாமலும், பிரிவு **B** இல் இருந்து **இரண்டு** வினாக்களுக்குக் குறையாமலும் தெரிவு செய்து, மொத்தம் **நான்கு** வினாக்களுக்கு விடையளிக்குக.

### பிரிவு A

**1.** (i) வில்லியம் சேக்ஸ்பியரது ‘கிங்லியர்’ நாடகத்தின் பிரதான முரண்பாடு யாது? (03 புள்ளிகள்)

(ii) மானுட அவலத்தின் ஊடாக மனிதன் எவ்வாறு தன்னை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதனை ‘கிங்லியர்’ நாடகத்தில் லியர் மன்னன் பாத்திரத்தின் ஊடாக சேக்ஸ்பியர் எவ்வாறு வெளிப்படுத்தியுள்ளார் என்பதை விளக்குக. (05 புள்ளிகள்)

(iii) "கிங்லியர் நாடகமானது சமகாலத்திற்குப் பொருத்தமானது.” இக் கூற்றின் பொருத்தப்பாட்டை ஆராய்க? (07 புள்ளிகள்)

**2.** (i) ஈழத்தில் தோன்றிய ‘பா’ நாடகாசிரியர் மூவரைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) அந்நியப் பண்பாட்டு ஆதிக்கம் ‘கோடை’ நாடகத்தில் வெளிப்படும் முறைமையினை விளக்குக. (05 புள்ளிகள்)

(iii) ஏகாதிபத்திய ஆட்சியினால் கிராமியச் சமுதாய மனப்பாங்கில் ஏற்பட்ட மாற்றங்கள் ‘கோடை’ நாடக பாத்திரச் சித்திரிப்பில் மேற்கிளம்பும் முறையினை விவரிக்குக. (07 புள்ளிகள்)

**3.** (i) கிரேக்கத்தின் நாடக வகைகள் மூன்றினைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) அவற்றுள் இரண்டு வகை நாடகங்களுக்கிடையிலான வேறுபட்ட இயல்புகளை முன்வைக்குக. (05 புள்ளிகள்)

(iii) ஈடிபஸ் மன்னன் நாடகத்தினை அடிப்படையாகக் கொண்டு உலக அரங்கில் கிரேக்க நாடக மரபின் முக்கியத்துவத்தை விளக்குக. (07 புள்ளிகள்)

### பிரிவு B

**4.** ‘அரசியல் சமூக சூழமைவுகள் நாடகங்களின் பாடுபொருளைத் தீர்மானிக்கின்றன’ என்பதனை பல்வேறு காலங்களில் வெளிவந்த ‘இராவணேசன்’ தயாரிப்பை அடிப்படையாகக் கொண்டு விளக்குக. (15 புள்ளிகள்)

**5.** அபிஞ்ஞான சாகுந்தலம் நாடகத்தின் சிறப்பிற்கு கரு, மோடி, விடயப் பொருள், பாத்திரங்கள் என்பன எவ்விதம் உதவுகின்றன என்பதை விளக்குக. (15 புள்ளிகள்)

**6.** பின்வருவோருள் **மூவரின்** அரங்கப் பணிகள் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.
(i) ஓகஸ்தாபோல்
(ii) பேட்டோல்பிறெச்ட்
(iii) பேராசிரியர்.க.கணபதிப்பிள்ளை
(iv) ஸ்ரனிஸ்லவஸ்கி
(v) குழந்தை.ம.சண்முகலிங்கம்

(3x5=15 புள்ளிகள்)

* * *

# (58) நாடகமும் அரங்கியலும் (தமிழ்)

## செய்முறைப் பரீட்சை

## பிரிவு - A

**நடிப்பு – A I**

I. பரீட்சார்த்தி தரப்பட்ட பாரம்பரிய ஆற்றுகை முறைமையிலிருந்து ஏதாவது ஒரு பாடலைத் தெரிவுசெய்து ஆற்றுகை செய்தல் வேண்டும்.

II. தரப்பட்ட பாரம்பரிய ஆற்றுகை முறைமைகளிலிருந்து ஏதாவது ஒரு ஆடல் வடிவத்தைத் தெரிவுசெய்து ஆற்றுகை செய்தல் வேண்டும்.

உதாரணம் :- வடமோடி
தென்மோடி
சிந்துநடைக்கூத்து
காமன்கூத்து

**கணிப்பீட்டு நியதிகள் :-** i. ஆற்றுகைத் திறன் - 05 புள்ளிகள்
ii. கற்பனைத் திறன் - 05 புள்ளிகள்
மொத்தம் **10 புள்ளிகள்**

**நடிப்பு – A II**

தரப்பட்ட (விதிக்கப்பட்ட) எழுத்துரு ஒன்றிலிருந்து தனிமொழி / தன்னுரை / புறச்சொல் அடங்கிய பகுதியை வழங்கி, அவற்றைத் தனியாக ஆற்றுகை செய்தல் வேண்டும்.

**கணிப்பீட்டு நியதிகள் :-** i. ஆற்றுகைத் திறன் - 05 புள்ளிகள்

ii. கற்பனைத் திறன் - 05 புள்ளிகள்
மொத்தம் **10 புள்ளிகள்**

**நடிப்பு – A III**

**சூழமைவுகளைப் புத்தாக்கம் செய்தல் (ஏதாவது இரண்டு)**

உதாரணம் :- அ. திருவிழா ஒன்றில் தவறவிடப்பட்ட சிறுமி
ஆ. லீசிங்கில் விரும்பிக் கொள்வனவு செய்த பொருளுக்குப் பணம் செலுத்த முடியாது தவிக்கும் வாடிக்கையாளர்.

**கணிப்பீட்டு நியதிகள் :-** i. ஆற்றுகைத் திறன் - 05 புள்ளிகள்
ii. படைப்பாக்கத் திறன் - 05 புள்ளிகள்
மொத்தம் **10 புள்ளிகள்**

**நடிப்பு – A IV**

பரீட்சகரால் வழங்கப்படும் இசையை ஆதாரமாகக் கொண்டு ஆடல், ஆடலன்ன அசைவுகள் (பொருள்களையும் பயன்படுத்தலாம்) போன்ற அரங்க மூலகங்களைப் பிரதானமாகக் கொண்டு ஆற்றுகையை நிகழ்த்துதல். (இசை இறுவட்டில் வழங்கப்படும்)

**கணிப்பீட்டு நியதிகள் :-** i. ஆற்றுகைத் திறன் - 04 புள்ளிகள்
ii. படைப்பாக்கத் திறன் - 04 புள்ளிகள்
iii. வாய்வழிப் பதில்கள் - 02 புள்ளிகள்

மொத்தம் **10 புள்ளிகள்**

(மாணவர்களின் ஆற்றுகையை மையப்படுத்தி வினாக்களை வினவலாம்.)

**பிரிவு - B**

**அரங்கில் காண்பிய வெளிப்பாடு**

(வேட உடை, வேடப்புனைவு, காட்சி, தட்டுமுட்டுக்கள், வெளி)

(தயார்படுத்த 10 நிமிடங்கள் வழங்கப்படும்)

விதிக்கப்பட்ட நாடக எழுத்துருவிலிருந்து தரப்பட்ட நாடகக் காட்சியை பரீட்சார்த்திகள் கூட்டாகச் செயற்பட்டு காண்பியச் சித்திரிப்பை மேற்கொள்ளல் வேண்டும். இதில் ஒவ்வொரு பரீட்சார்த்திக்குமுரிய பாத்திரங்கள் தெரிவுச் சீட்டு மூலம் வழங்கப்படும்.

**அன்றேல்**

வினாத்தாளில் வழங்கப்படும் சூழமைவுகளில் ஒன்றின் காட்சியைப் பரீட்சார்த்திகள் கூட்டாகச் செயற்பட்டு காண்பியச் சித்திரிப்பை மேற்கொள்ள வேண்டும். இதில் ஒவ்வொரு பரீட்சார்த்திக்குமுரிய பாத்திரங்கள் தெரிவுச் சீட்டு மூலம் வழங்கப்படும்.

**கணிப்பீட்டு நியதிகள் :-**

| | | | |
|---|---|---|---|
| i. | வேட உடை | - | 10 புள்ளிகள் |
| ii. | ஓப்பனை | - | 10 புள்ளிகள் |
| iii. | காட்சி | - | 10 புள்ளிகள் |
| | மொத்தம் | | **30 புள்ளிகள்** |

**பிரிவு - C**

**நெறியாள்கை - 1**

குழு நிலைப்பட்ட செயற்பாடாகப் பின்வருவனவற்றுள் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு 05 நிமிடத்திற்குரிய நாடகம் ஒன்றை நெறியாள்கை செய்தல் வேண்டும். (இத் தயாரிப்பில் ஆடல், பாடல் என்பன உள்ளடங்க வேண்டும்)

உதாரணமாக :- அ. கைத்தொலைபேசியின் ஆதிக்கம்.
ஆ. விபத்துக்களிலிருந்து நம்மைப் பாதுகாப்போம்.
இ. மூத்தோரைப் பேணுவோம்.

**கணிப்பீட்டு நியதிகள் :-**

| | | | |
|---|---|---|---|
| i. | தயாரிப்பு | - | 10 புள்ளிகள் |
| ii. | நெறியாள்கை | - | 10 புள்ளிகள் |
| | மொத்தம் | | **20 புள்ளிகள்** |

**நெறியாள்கை – 11**

பிரபல்யமான நாடகங்களின்பகுதிகளை திரையில் அல்லது கணினித் திரையில் போட்டுக் காட்டி நாடகத்தின் நுட்பங்கள் பற்றி விளக்கங்கள் வினவப்படும்.

(வினாத்தாளில் வினாக்கள் தரப்படும்)

**கணிப்பீட்டு நியதிகள் :-**

| | | | |
|---|---|---|---|
| i. | வாய்மொழி மூல வினா (1) | - | 05 புள்ளிகள் |
| ii. | வாய்மொழி மூல வினா (2) | - | 05 புள்ளிகள் |
| | மொத்தம் | | **10 புள்ளிகள்** |